உ
சிவமயம்

# சிவம்

"சி" என்பது கிடத்தல் எனப் பொருள்படும். அஃதாவது, எல்லாப் பொருள்களும் இறுதிக்காலத்துத் தன்னிடத்து ஒடுங்க, அவை போலத் தான் ஒடுங்குதலின்றி அவற்றிற்கெல்லாம் ஒடுங்குமிடமாய் நிலை பெற்று, என்றும் ஒரே தன்மையுடையதாய் நிற்பது என்பது அதன் பொருளாம். இறுதிக்காலத்து உலகமனைத்துந் தத்துவங்களினும், தத்துவங்கள் மாயையினும், மாயை சிவசத்தியினும், சிவசத்தி சிவத்தினும் ஒடுங்க, சிவம் அவையனைத்தையும் ஒடுக்கிச் சுயம்பிரகாசமாய் நிற்குமென்பது வேதாகம நூற்றுணிபாம்.

"வ" என்பது அப்பொருளின் குணமாகிய சத்தியையுணர்த்தும். அது சூரியனில் ஒளி போல்வது. ஒளியும் சூரியனும் வேறல்லவாயினும் குணத்தன்மை குணித்தன்மை யென்னும் தன்மை வேறுபாட்டால் இருமையாக எண்ணப்படும். அவ்வாறே, சத்தி சிவம் என்பன குணகுணி பாவத்தால் இரு தன்மயுடையனவென மதித்து, அப்பொருள் பயக்கும் பெயராய் ஈரியல்பினையும் அடங்கி "சிவம்" எனப்படும்.

அச்சிவத்தின் இயல்பு ஞானமும் ஆனந்தமுமாம். ஞானம் என்பது சத்தும் சித்துமாய் இரு தன்மையை யடக்கி நிற்கும். சத்தாவது காரிய காரணப்படுதலின்றி, என்றும் ஒரே படித்தாய் நிற்பது. சித்தாவது உணர்த்த உணர்தலின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்பது. இந்த இரண்டு தன்மையும் முதல்வனிடத்துள்ள விசேட இயல்பாம். அதுவே ஞானம் எனப்படும். ஆனந்தமாவது சருவஞ்ஞத்துவம், திருத்தி, அநாதி போதம், சுவதந்திரம், அலுத்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்தேகம் என்னும் எண்குணமுடைமையாம்.

இச்சிவத்தின் குணங்கள் பலவற்றுள் உயிர்களின் மேல் வைத்த கருணைக்குணம் பராசத்தி யெனப்படும். அக்கருணையின் வசப்பட்டு நின்ற சிவம் அந்நிலையிற் பதியெனப்படும். அப்பதியினது சந்நிதானத்தில் உலகம் ஐந்தொழிற்படும். அவ்வைந்தொழில் நடத்தற்கு ஏதுவாய் நின்ற பதியினது சத்தி ஆதி அல்லது திரோதாயி எனப்படும். பதியும் அவ்வாதி சத்தியும், சூரியனும் அதன் கிரணமும் போல நிற்பனவாம். சூரிய சந்நிதானத்தில் அதன் கிரண விசேஷத்தால் தாமரை அரும்புதலும் மலர்தலும், புலர்தலுமாகிய காரியப்பாட்டினை எப்படி யடையுமோ, அப்படியே, பதியினுடைய சந்நிதானத்தில் அதன் கிரணமும் போல நிற்பனவாம். சூரிய சந்நிதானத்தில் அதன் கிரண விசேஷத்தால் தாமரை அரும்புதலும் மலர்தலும், புலர்தலுமாகிய காரியப்பாட்டினை எப்படி யடையுமோ, அப்படியே, பதியினுடைய சந்நிதானத்தில் உலகம் தோன்றி நின்று அழிதலாகிய காரியப்பாடினை யடையும். இந்த உவமானத்தில் தாமரையினது காரியப்பாட்டால் சூரியனுக்கு யாதொரு விகாரமுமின்மை எவரும் அறியத்தக்கது. அது போலவே உலகினது காரியப்பாட்டில் முதல்வனுக்கு விகாரமின்மை தெளியப்படும். இன்னும் அவ்வுவமானத்திற் சூரிய கிரணமும் விகாரப்படுதலில்லை. அது போல ஆதி சத்தியும் விகாரமடைதலில்லை. அச்சத்தி உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவத்தையளிக்க விரும்பிய பொழுது இச்சாசத்தி யெனப்படும். அதன் பொருட்டுச்

செய்ய வேண்டிய உபாயங்களை யறியும் போது ஞானசத்தி யெனப்படும். அவற்றைச் செய்யும் போது கிரியாசத்தி யெனப்படும். இவ்வாறு வியாபார பேதம் பற்றி ஐவகையாகக் கொள்ளினும் முதல்வனது சத்தி ஒன்றேயாம்.

இன்னும், ஆதிசத்தி ஐந்தொழில் செய்யு மவதரத்தில் ஆரணி, செநதி, ரோதயித்திரி என முத்திறமாக எண்ணப்படும். அச்சத்திகள் மூன்றும் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐந்து கர்த்தாக்களை யதிட்டித்து நின்று, முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களைச் செய்யும். அச்சிவசத்தி இவர்களிடத்தே தங்கி இவர்களை அதிட்டித்து ஐந்தொழில் செய்தலால், இவர்களும் சிவவடிவங்களாக உபசரித்துக் கூறப்படுவர். உண்மையில் இவர்கள அதிட்டான வடிவங்களாம். அதிட்டானமாவது நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல். பதியின் ஆதிசத்தி ஆரணை முதலிய மூன்றாக நின்று ஐந்து கர்த்தாக்களை அதிட்டிக்குமென் றுணரத்தக்கது. அது எது போலுமெனில், அரசனுடைய ஆணையாகிய சத்தி மந்திரி முதலாகிய பலரிடத்து நின்று அவ்வவர்க்குரிய தொழிலை நடத்துதல் போலு மென்க.

இன்னும், முதல்வனார் ஊரும் பெயரும் உருவுங் கடந்தவராயினும் உயிர்களிடத்தே வைத்த கருணையால் ஊரும் பெயரும் உருவுங் கொண்டருளுவர். அப்படிக் கொள்ளுமிடத்துத் தனது அருட்சத்தியினிடமாகக் கொள்வதும், மாயையினிடமாகக்கொள்வதும் என்னும் வேறுபாடு பற்றி அவை இருவகைப்படும். அருட்சத்தியினிடமாகக் கொள்ளும் வடிவங்கள் சம்புபட்சமெனப்படும். மாயையினிடமாகக் கொள்ளும் வடிவங்கள் அணுபட்சமெனப்படும். ஆடியில் நிழல் போல்வது அருட்சத்தியினிடமாகத் தோன்றுவது. அது பூசை தியானாதிகளின் பொருட்டுக் கொள்ளபடுங் கற்பித வடிவமாம்.

சூரிய சந்நிதானத்தில் இருள் முனைத்து நில்லாதவாறு போல, சிவமென்னும் பொருளின் எதிரே மலமாயை கன்மங்கள் முனைத்து நிலா. அதனால் அவை சிவத்தினால் இயக்கமுறுமென்று கொள்ளுதல் அமையாது. அது பற்றியே சத்தியின் ஏகதேச வியாபரிப்பில் அவை தொழிற்படுமென்று வேத சிவாகமங்கள் கூறும்.

இனி, மாயாகாரிய வடிவம் முதல்வனெதிரே அசத்தாயொழிதலின், அவ்வடிவினை முதல்வன் என்று கொள்ளான். அதனால் அவை சத்தியின் அதிட்டானமாகிய அணுபட்சங்களென உண்மை யுணர்தற்பாற்று.

இவ்வகையில் அயனும் அரியும் பிரகிருதியுட்பட்டவராகலின், அவ்வியல்புடைய சகலவர்கத்துள் அதிகாரம் பெற்றவரென எண்ணப்படுவர். உருத்திர மூர்த்தி பிரகிருதியை நீங்கினவராகலின், அவ்வியல்புடைய பிரளயாகலருள் முத்தராய் அதிகாரம் பெற்றுச் சிவவடிவெய்தி நிற்பவராக எண்ணப்படுவர். மகேசுர சதாசிவர்கள் ஈசுரசாதாக்கிய தத்துவ நிலையராகலின், இறைவனது சுதந்தர வடிவமாகிய அதிகார போக ரூபங்களாம். இவையனைத்தினும் பதியினது சத்தியே நிலவுவதாம். அக்கினியானது ஒன்றிற்றங்கி நின்றல்லது தொழில் செய்யாது. அது போலவே சிவசத்தியும் ஒவ்வோர் வடிவினை யதிட்டித்து நின்றே தொழில் செய்யும். தாமரையின் காரியப்பாடு சூரிய கிரண சம்பந்தத்தால் நிகழ்தல் போல, ஐந்தொழிற்படு முறைமை சிவசத்தி சம்பந்தத்தால் நிகழ்வதாம்.

அதனால், முதல்வனுக்கு உளதாகிய இவ்வியல்பு பொது வியல்பு எனப்படும்.

தாமரைக்கும் சூரியனுக்கும் உளதாகிய சம்பந்தம் எத்துணையோ, அத்துணையே, உலகுக்கும் பதிக்கும் உளதாகிய சம்பந்தமும், அது பற்றி வரும் பொது வியல்புமாம்.

சூரியனாலே தாமரை காரியப்படுமென்பது மறுக்க இயலுவதன்று. அது போலவே உலகம் பதிபொருளாற் காரியப்பாடுறும் என்பதும் மறுக்கத் தக்கதன்று.

இனி, முதல்வன் உயிர்கள் பொருட்டாகக் கொள்ளும் உருவங்களில் உமாமகேசுரர், தக்ஷிணாமூர்த்தி, சபாபதி முதலியவாக இருபத்தைந்து வடிவங்களும், அவற்றுள்ளும் பல பேதங்களும் உள்ளனவென்பது உண்மையாம். அவை ஒவ்வோர் காலத்து ஒவ்வொருவர் பொருட்டு ஒவ்வொரு காரணம் பற்றிக் கொள்ளப்பட்டன. இவ்விருபத்தைந்து கேவல மூர்த்தங்களும் மகேசுரராற் கொள்ளப்படுவன. உருத்திரர்க்கும் அவை உரியனவேயாம். பிரம விஷ்ணுக்கள் அவ்வடிவினை எடுத்தற்கு உரியவரல்லர். அவரது சகல நிலையே அங்ஙனமொழிதற்குக் காரணமாம்.

இதுகாறுங் கூறியவாற்றால், சிவம், சத்தி, பதி, சத்தி பேதங்கள், பதி பேதங்கள், அதிட்டான வடிவங்கள் என்பன நுனித்து உணர நின்றன. முதல்வனது சிறப்பியல்பும் பொது வியல்பும் வெள்ளிடை மலைபோல் விளங்கக் கிடந்தன. இவற்றின் உண்மை யுணர்ந்தாரே சிவத்தின் இயல்புணர்ந்தவராவர். ஏனையோர் அன்னராகாரென்றுணர்க.